# (42) இந்து சமயம்

## வினாத்தாள் கட்டமைப்பு

வினாத்தாள் I - **நேரம் : இரண்டு மணித்தியாலங்கள்.**
**5** தெரிவுகளைக் கொண்ட **50** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது.
**எல்லா** வினாக்களுக்கும் விடையெழுதுதல் வேண்டும். ஒரு வினாவிற்கு **01** புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் **50** ஆகும்.

வினாத்தாள் II - **நேரம் : மூன்று மணித்தியாலங்கள்.** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)
இவ்வினாத்தாள் பகுதி **I**, பகுதி **II** என இரு பகுதிகளைக் கொண்டது.

பகுதி I - இப்பகுதி **மூன்று பகுதிக் கட்டமைப்புவகை** வினாக்களைக் கொண்டது. அவற்றுள் ஏதாவது **இரண்டு** வினாக்களுக்கு விடையெழுதுதல் வேண்டும். ஒரு வினாவுக்கு **20** புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் **40.**

பகுதி II - இப்பகுதி **ஐந்து கட்டுரைவகை** வினாக்களைக் கொண்டது. அவற்றுள் எவையேனும் **மூன்று** வினாக்களுக்கு விடையெழுதுதல் வேண்டும். ஒரு வினாவுக்கு **20** புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் **60.**
**வினாத்தாள் II** இற்கு மொத்தப் புள்ளிகள் **100** ஆகும்.

| இறுதிப் புள்ளியைக் கணித்தல் : | | | |
|---|---|---|---|
| | **வினாத்தாள் I** | | = 50 |
| | **வினாத்தாள் II** | = 100 ÷ 2 | = 50 |
| | இறுதிப் புள்ளி | | = 100 |

## வினாத்தாள் I

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க. பல்தேர்வு வினாக்களுக்கு விடையளிப்பதற்குரிய தாள் வழங்கப்படும்.

---

- 01 தொடக்கம் 05 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதாவது ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாது. **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**1.** (1) வேதங்கள் (2) இதிகாச புராணங்கள் (3) தர்மசாஸ்திரங்கள்
(4) ஆகமங்கள் (5) மெய்க்கீர்த்திகள்

**2.** (1) பிரம்மசபை (2) இரத்னசபை (3) கனகசபை
(4) தாமிரசபை (5) சித்ரசபை

**3.** (1) திருமூலர் (2) யோகர்சுவாமி (3) அகத்தியர்
(4) பட்டினத்தார் (5) சிவவாக்கியர்

**4.** (1) வாரம் (2) திதி (3) அயனம்
(4) நட்சத்திரம் (5) யோகம்

**5.** (1) சாலோகம் (2) சாமீபம் (3) சாரூபம்
(4) கைவல்யம் (5) சாயுச்சியம்

- **06** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிச் சொற்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒரு** சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை. **பொருந்தாத** அச்சோடிச் சொல்லைத் தெரிவுசெய்க.

**6.** (1) உருபு இயல் - பாசவிடுதலை
(2) பிரமாண இயல் - பதி உண்மை
(3) இலக்கண இயல் - பசுவின் தன்மை
(4) சாதன இயல் - ஆன்ம சுத்தி
(5) பயன் இயல் - சிவப்பேறு

**7.** (1) சைவம் - சிவன்
(2) சாக்தம் - சக்தி
(3) காணபத்தியம் - விநாயகர்
(4) பைரவம் - பிரமன்
(5) கௌமாரம் - முருகன்

**8.** (1) சேர் பொன். இராமநாதன் - இலங்கைச் சட்ட நிரூபணசபை
(2) இந்துபோர்ட் சு. இராசரத்தினம் - சைவ வித்யா விருத்திச் சங்கம்
(3) பசுபதிச் செட்டியார் - சைவ பரிபாலன சபை
(4) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் - சைவப்பிரகாச வித்தியாசாலை
(5) சுவாமி விபுலாநந்தர் - இந்துமாமன்றம்

**9.** (1) நிலாவெளிச் சாசனம் - திருக்கோணேஸ்வரம்
(2) தட்சணகைலாய சாசனம் - திருக்கேதீஸ்வரம்
(3) மெடிரிகிரியா கல்வெட்டு - பண்டித சோழேஸ்வரம்
(4) குருநாகல் கல்வெட்டு - விக்கிரமசாளமேகேஸ்வரம்
(5) பதவியாக் கல்வெட்டு - காளி கோயில்

**10.** (1) லெபாஷி வீரபத்திரர் கோயில் - சிறுத்தொண்டர் நாயனார் வரலாறு
(2) மதுரை மீனாட்சி அம்மன் ஆலயம் - அர்த்தநாரீஸ்வர வடிவம்
(3) திருவண்ணாமலை ஆலயம் - மகிஷாசுரமர்த்தினி வடிவம்
(4) தேவிகாபுரம் - லிங்கோற்பவ வடிவம்
(5) ஐகோள் துர்க்கையம்மன் ஆலயம் - கந்த புராணக் கதை

- **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **'அ'**, **'ஆ'** என்னும் நிரல்களின் கீழ் சில விடயங்கள் தரப்பட்டுள்ளன. **'அ'** நிரலுக்கு ஏற்ற விதத்தில் **'ஆ'** நிரலில் பொருத்தமாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**11.**

| | **அ** | **ஆ** |
|---|---|---|
| (i) | ஊடகம் | A - போதிகை |
| (ii) | கோலாட்டம் | B - அருட்கவி. சீ. விநாசித்தம்பி |
| (iii) | சைவபரிபாலன சபை | C - கிராமியக் கலை |
| (iv) | தூண்கள் | D - பஞ்சாங்கம் |
| (v) | கதாப்பிரசங்கம் | E - இந்து சாசனம் (HINDU ORGAN) |

(1) ABCDE (2) BCDEA (3) DCEAB (4) CEDAB (5) DEABC

**12.**

| | **அ** | **ஆ** |
|---|---|---|
| (i) | சகமார்க்கம் | A - திருவாவடுதுறை ஆதீனம் |
| (ii) | நின்றசீர் நெடுமாறன் | B - கிருஸ்ணதேவராயர் |
| (iii) | விருபாட்சகர் கோயில் | C - மகேந்திரவர்மன் |
| (iv) | மெய்கண்ட தேவர் | D - சம்பந்தர் |
| (v) | சங்கீர்ண ஜாதி | E - நம்பியாரூரர் |

(1) ACBDE (2) EDBAC (3) EBACD (4) DECBA (5) ADBCE

| | அ | ஆ |
|---|---|---|
| 13. | (i) நம்மாழ்வார் | A - திருப்பல்லாண்டு |
| | (ii) ஆண்டாள் | B - பெருமாள் திருமொழி |
| | (iii) பெரியாழ்வார் | C - பெரிய திருவந்தாதி |
| | (iv) குலசேகராழ்வார் | D - கண்ணினுள் சிறுதாம்பு |
| | (v) மதுரகவியாழ்வார் | E - நாச்சியார் திருமொழி |

(1) CABDE (2) ACBED (3) CEABD (4) AEBCD (5) DECBA

| | அ | ஆ |
|---|---|---|
| 14. | (i) இராஜசிம்மன் | A - தஞ்சைப் பெருங்கோயில் |
| | (ii) நந்திவர்மன் | B - காஞ்சி கைலாசநாதர் கோயில் |
| | (iii) இராஜராஜ சோழன் | C - கங்கைகொண்ட சோழேஸ்வரர் |
| | (iv) இராஜேந்திரன் | D - மதங்கேஸ்வரர் கோயில் |
| | (v) முதலாம் நரசிம்மன் | E - ஆதிவராக மண்டபம் |

(1) BDACE (2) CDABC (3) DCBAE (4) ECABD (5) ABCDE

| | அ | ஆ |
|---|---|---|
| 15. | (i) பத்திரலிங்கம் | A - நிராதர தீட்சை |
| | (ii) விஞ்ஞானகலர் | B - சிவலிங்கம் |
| | (iii) சூக்குமலிங்கம் | C - கோபுரம் |
| | (iv) பஞ்சாசாரங்கள் | D - பலிபீடம் |
| | (v) தூலலிங்கம் | E - சிவாசாரம் |

(1) ACBED (2) CADCB (3) BACDE (4) CEBAD (5) DABEC

- **16** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழே தரப்பட்டுள்ளவற்றுள் மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**16.** வேதம் நான்கிலும் மெய்ப்பொருள் ஆகிய சிவனது 'நமசிவாய' என்ற மந்திரம் முதன் முதலில் இடம் பெற்றது,

(1) மகாபாரத பகவத் கீதையில் (2) இராமாயண யோகவசிஷ்டத்தில் (3) யசுர் வேத சதருத்திரியத்தில்
(4) பதஞ்சலி யோகசூத்திரத்தில் (5) பாதராயணர் பிரமசூத்திரத்தில்

**17.** சிதம்பரத்தின் மீது கோயிற்புராணம் பாடியவர்

(1) அருணந்திதேவர் (2) உமாபதி சிவாசாரியார் (3) பரஞ்சோதி முனிவர்
(4) குமரகுருபரர் (5) அபிராமிப்பட்டர்

**18.** சிவசூத்திரம் எச்சமயத்தின் மூலநூல்?

(1) சித்தாந்த சைவம் (2) வீரசைவம் (3) காஷ்மீர சைவம்
(4) மாவிரதம் (5) இலிங்காயதம்

**19.** உத்தராயண காலத்தில் இடம்பெறும் பண்டிகைகள்

(1) தீபாவளி, வருடப்பிறப்பு (2) தைப்பொங்கல், தீபாவளி
(3) வருடப்பிறப்பு, ஆடிப்பிறப்பு (4) தீபாவளி, ஆடிப்பிறப்பு
(5) தைப்பொங்கல், வருடப்பிறப்பு

**20.** 'சிற்பக் கலைக் களஞ்சியம்' என அழைக்கப்படும் ரதக்கோயில்

(1) அருச்சுனன் ரதம் (2) பிடாரி ரதம் (3) வீம ரதம்
(4) தர்மராஜ ரதம் (5) திரௌபதி ரதம்

**21.** கொடியேற்றத்திருவிழாவில் கொடிமரம் சுட்டி நிற்பது

(1) பதியை (2) பசுவை (3) திருவருட் சக்தியை (4) ஆணவத்தை (5) கன்மத்தை

**22.** ஆணவ மலத்தின் குணங்களுள் அடங்காதது

(1) விகற்பம் (2) மோகம் (3) கொலை (4) நகை (5) பரநிந்தை

**23.** உபநிடதங்கள் சித்திரிக்கும் அறப்பண்புகள் அல்லாதது

(1) ஸத்யம் வத (2) தர்மம் சர (3) தத் துவம் அஸி
(4) மாத்ருதேவோ பவ (5) பித்ருதேவோ பவ

**24.** தன்னலமற்ற சேவையை மார்க்கமாகக் கொண்டது

(1) இராஜ யோகம் (2) கரும யோகம் (3) பக்தி யோகம்
(4) அட்டாங்க யோகம் (5) ஞான யோகம்

**25.** சிவனைப் பல பெயர்களால் குறிப்பிடும் பழந்தமிழ் இலக்கியம்

(1) திருக்குறள் (2) பரிபாடல் (3) திருமந்திரம்
(4) சிவபுராணம் (5) முதலாம் திருவந்தாதி

**26.** சங்கரர் இயற்றிய நூல்

(1) சர்வ மூலம் (2) சிவானந்தலஹரி
(3) சிவப்பிரகாசம் (4) நீலகண்ட பாஷ்யம்
(5) வேதார்த்த சங்கிரகம்

**27.** தச காரியச் செயற்பாடுகள் அடங்கிய தொகுதி

(1) ஆன்ம தரிசனம், தத்துவரூபம், சிவயோகம், சிவஞானம்
(2) ஆத்மரூபம், தத்துவரூபம், தத்துவசுத்தி, பசுஞானம்
(3) சிவ தரிசனம், ஆத்மரூபம், சிவரூபம், பதிஞானம்
(4) தத்துவரூபம், தத்துவசுத்தி, ஆன்மசுத்தி, பாசஞானம்
(5) சிவஞானம், ஆத்மரூபம், தத்துவ தரிசனம், கலைஞானம்

**28.** உமாபதி சிவாசாரியாரின் சித்தாந்த அட்டகத்துள் அடங்கிய தொகுதி

(1) சிவப்பிரகாசம், திருவருட்பயன், உண்மைநெறி விளக்கம், வினா வெண்பா
(2) கொடிக்கவி, இருபா இருப∴து, திருவருட்பயன், நெஞ்சுவிடுதூது
(3) சங்கற்ப நிராகரணம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், உண்மைநெறி விளக்கம்
(4) வினா வெண்பா, நெஞ்சுவிடுதூது, சிவஞானபோதம், போற்றிப்ப∴றொடை
(5) திருவருட்பயன், கொடிக்கவி, சிவஞான சித்தியார், உண்மைநெறி விளக்கம்

**29.** நாட்டார் கலை வடிவங்கள்

(1) கரகாட்டம், பரதம், கும்மி, நாடகம் (2) பரதம், கதகளி, குச்சுப்புடி, கோலாட்டம்
(3) கூத்து, கும்மி, கதகளி, காவடி (4) பரதம், கதகளி, கும்மி, கோலாட்டம்
(5) கரகாட்டம், காவடி, கூத்து, கும்மி

**30.** சங்கீத மும்மூர்த்திகள் எனக் குறிப்பிடப்படும் இசைப்பெரியார்கள் அடங்கும் தொகுதி

(1) தியாகராஜ பாகவதர், முத்துஸ்வாமி தீட்சிதர், எம்.எஸ். சுப்புலட்சுமி
(2) தியாகராஜ சுவாமிகள், முத்துஸ்வாமி தீட்சிதர், சியாமாசாஸ்திரி
(3) தியாகராஜ பாகவதர், சீர்காழி கோவிந்தராஜன், எம்.எஸ். சுப்புலட்சுமி
(4) சீர்காழி கோவிந்தராஜன், கே.பி. சுந்தராம்பாள், எம்.எஸ். சுப்புலட்சுமி
(5) எம்.எஸ். சுப்புலட்சுமி, கே.பி. சுந்தராம்பாள், டி.கே. பட்டம்மாள்

- **31** தொடக்கம் **35** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**31.** மத்துவர்

(1) பாகவத புராண விளக்க நூல் எழுதியமை
(2) கன்னடத்தில் ஹரிதாசர்களை உருவாக்கியமை
(3) சகுணப் பிரமத்தை முதன்மைப்படுத்தியமை
(4) அத்வைத மதத்தை நிறுவியமை
(5) அச்சுதப்பிரேக்ஷரைக் குருவாக ஏற்றமை

**32.** தஞ்சைப் பெருங்கோயில் ஓவியங்கள்

(1) சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட காட்சி
(2) மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருமணக் காட்சி
(3) மங்கையரின் மாண்புமிகு காட்சி
(4) யோக தட்சணாமூர்த்தி காட்சி
(5) மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருமணக் காட்சி

**33.** ஆத்தி சூடி

(1) வெண்பா யாப்பில் அமைந்துள்ளது.
(2) வேத உபநிடதக் கருத்துக்களின் சாரமாக அமைந்துள்ளது.
(3) அறவியற் கருத்துக்கள் வெளிப்படுத்தப்படுகின்றது.
(4) தமிழ் நெடுங்கணக்கு முறையிலமைந்த நூல் ஆகும்.
(5) இந்து தத்துவ சிந்தனையை அடிப்படையாகக் கொண்டது.

**34.** ஆண்டாள்

(1) கற்பனாசக்தியையும் கவிதை இயற்றும் சக்தியையும் பெற்றிருந்தார்.
(2) பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள் ஆவார்.
(3) இவரின் இளமைப் பெயர் கோதை என்பதாகும்.
(4) விஷ்ணுவைக் காதலனாகக் கொண்டு பாடல்கள் பாடியுள்ளார்.
(5) பெரிய திருவந்தாதியைப் பாடியுள்ளார்.

**35.** கடையிற்சுவாமிகள்

(1) இராமநாதபுரத்தில் ஆட்சி செய்த சிற்றரசர் பரம்பரையில் உதித்தவர்.
(2) நீதிபதியாகக் கடமையாற்றியவர்.
(3) நரசிங்க பாரதியாரின் உத்தம சீடன்.
(4) முத்தியானந்தர் என்னும் தீட்சாநாமம் கொண்டவர்.
(5) குழந்தைவேல் சுவாமிகளை உத்தம சீடராகக் கொண்டவர்.

- மேல்வரும் பகுதியில் A - J வரையில் தரப்பட்டுள்ள சொற்களுள் இவ்விரண்டு சொற்கள் குறிப்பிட்டவொரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **36** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவு செய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>சுவடி | B<br>ஆனந்தக் குமாரசுவாமி | C<br>நாயன்மார்கட்டு | D<br>திருநீலகண்ட யாழ்ப்பாணர் | E<br>காலடி |
| F<br>இராமேசுவரம் | G<br>காந்தாரம் | H<br>முரசு | I<br>உடுக்கு | J<br>காஞ்சி |

**36.** நடராஜ வடிவத்துடன் தொடர்புடைய சேர்மானம்

(1) B C (2) I J (3) B I (4) G I (5) G J

**37.** பண்ணிசையுடன் தொடர்புடைய சேர்மானம்

(1) A D (2) D G (3) E J (4) G J (5) C D

**38.** மரபுவழி ஊடகவகையுடன் தொடர்புடைய சேர்மானம்

(1) AB (2) A E (3) A H (4) H J (5) A F

**39.** ஆதிசங்கரருடன் தொடர்புடைய சேர்மானம்

(1) F I (2) E J (3) A G (4) G J (5) E F

**40.** ஆரியச்சக்கரவர்த்திகளுடன் தொடர்புடைய சேர்மானம்

(1) C F (2) C D (3) E F (4) G H (5) D F

- **41** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தலைப்புக்கு மிகப் பொருத்தமானதைத் தெரிவுசெய்க.

**41.** முன்னேஸ்வரம்

(1) மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பன முறையாக அமைந்த ஆலயம்
(2) மன்னர்களால் புனருத்தாரணப் பணிகள் செய்யப்பட்ட ஆலயம்
(3) சிவராத்திரி விரதம் சிறப்பாக அனுட்டிக்கப்படும் ஆலயம்
(4) ஈழத்துப் புராதன சிவாலயங்களுள் ஒன்று
(5) பக்தோற்சவம் சிறப்பாக நடைபெறும் ஆலயம்

**42.** சங்கமம்

(1) சிவனடியார்களை வழிபடுவோர் (2) சிவசின்னங்களை அணிவோர்
(3) ஆலய தரிசனம் செய்வோர் (4) ஞான உபதேசம் செய்வோர்
(5) ஆச்சாரியராகத் திகழ்வோர்

**43.** பஞ்சமுக விநாயகர்

(1) சிவவடிவங்களுள் ஒன்று (2) மேலான பரமேஸ்வர வடிவம்
(3) தனக்கு மேல் தலைவர் இல்லாதவர் (4) எல்லாத் தெய்வங்களின் அடக்கம்
(5) பத்துக் கரங்களை உடையவர்

**44.** மாணிக்கவாசகர்

(1) ஜைனர்களால் துன்புறுத்தப்பட்டவர்.
(2) காவிரியாறு பிரிந்து வழிவிடச் செய்தவர்.
(3) குலசேகர சோழ மன்னனுக்கு அமைச்சரானவர்.
(4) பெரியபுராணத்தில் பெயர்சுட்டியழைக்கப்படாதவர்.
(5) செம்மனச் செல்வியின் இன்னல் தீர்த்தவர்.

**45.** சிவஞானபோதம்

(1) ஞானாமிருதத்துக்குக் காலத்தால் முற்பட்டது.
(2) சைவசித்தாந்த விரிநூல் எனப்படுவது.
(3) சகலாகம பண்டிதரால் இயற்றப்பட்டது.
(4) பரபக்கம் சுபக்கம் எனும் இரு பகுதிகளையுடையது.
(5) இதன் சிறப்புப்பாயிரம் அருணந்தி சிவாசாரியாரால் இயற்றப்பட்டது.

**46.** பஞ்ச யக்ஞங்களுள் அடங்காதது

(1) பிரமயக்ஞம் (2) தேவயக்ஞம் (3) பிதிர்யக்ஞம் (4) வேதயக்ஞம் (5) பூதயக்ஞம்

**47.** சாமவேதப் பிராமணங்களில் அடங்காதது

(1) தாண்டியமகாப் பிராமணம் (2) சட்விம்ச பிராமணம் (3) ஜைமிநீய பிராமணம்
(4) பஞ்சவிம்சதி பிராமணம் (5) தைத்திரியப் பிராமணம்

**48.** இருபதாம் நூற்றாண்டில் இலங்கையில் தோன்றிய பத்திரிகைகளில் அடங்காதது

(1) சைவசித்தாந்த பானு (2) விவேகானந்தன் (3) சிவதொண்டன்
(4) இந்து ஒளி (5) மெய்கண்டார் நெறி

**49.** சற்புத்திர மார்க்கத்தில் நின்று வாழ்ந்து காட்டியவர்

(1) திருஞானசம்பந்தர் (2) திருநாவுக்கரசர் (3) சுந்தரமூர்த்தி நாயனார்
(4) மாணிக்கவாசகர் (5) அப்பூதி அடிகள் நாயனார்

**50.** விசித்திரசித்தன் என்ற விருதுப்பெயர் பெற்ற மன்னன்

(1) இராஜராஜன் (2) இராஜசிம்மன் (3) நரசிம்ம வர்மன்
(4) முதலாம் மகேந்திரவர்மன் (5) பரமேஸ்வர வர்மன்

* * *

# (42) இந்து சமயம்
## வினாத்தாள் II

* **பகுதி** I இலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும், **பகுதி** II இலிருந்து எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

---

### பகுதி I

**1.** "இந்து சமயத்தின் தொன்மையை அறிந்து கொள்வதற்குச் சிந்துவெளித் தொல்பொருட் சின்னங்கள் துணைபுரிகின்றன." இதனை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.

(அ) சிவ வழிபாடு
(ஆ) தாய்த்தெய்வ வழிபாடு
(இ) கலைகள்
(ஈ) சமூகநிலை

(05 × 4 = 20 புள்ளிகள்)

**2.** "வேதமோடாகமம் மெய்யாம் இறைவன்நூல்" எனும் இக்கூற்றினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) வேதங்களில் இயற்கை வழிபாடு
(ஆ) வேதங்களில் ஓர் இறைக் கொள்கை
(இ) சிவாகமங்கள் கூறும் நித்தியக்கிரியைகள்
(ஈ) சிவாகமங்களில் சிவவடிவங்கள்

(05 × 4 = 20 புள்ளிகள்)

**3.** "இந்துசமய வரலாற்றில் விஜயநகர காலம் தனிச்சிறப்புடையது." இக்கூற்றினை மேல்வரும் தலைப்புகளில் விபரிக்குக.

(அ) இந்துக் கோயில்கள்
(ஆ) இந்துசமய இலக்கியங்கள்

(10 × 2 = 20 புள்ளிகள்)

### பகுதி II

**4.** வேதாந்த தத்துவ வளர்ச்சியில் சங்கர வேதாந்தம் பெறுகின்ற முக்கியத்துவத்தினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) பிரமம்
(ஆ) ஆன்மா
(இ) பிரபஞ்சம்
(ஈ) விடுதலை

(05 × 4 = 20 புள்ளிகள்)

**5.** இந்து தத்துவஞான மரபில் சாங்கியம் மற்றும் யோகத்தின் அடிப்படைகளை மேல்வரும் தலைப்புகளில் விளக்குக.

(அ) சாங்கியம் கூறும் இருமைவாதம்
(ஆ) யோகதரிசனத்தில் அட்டாங்க யோகம்

(10 × 2 = 20 புள்ளிகள்)

**6.** சைவசித்தாந்தம் கூறும் முப்பொருட்களில் பதி பற்றிய கருத்துகளை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலனை செய்க.

(அ) பதியுண்மை
(ஆ) பதியின் சொரூபலட்சணம்
(இ) பதியின் தடத்தலட்சணம்
(ஈ) சிவ சிற்சக்தி

(05 × 4 = 20 புள்ளிகள்)

**7.** நாட்டார் வழிபாட்டு மரபுகளில் மேல்வருவன பெறுகின்ற முக்கியத்துவத்தினை மதிப்பிடுக.

(அ) கண்ணகி வழிபாட்டு முறைமைகள்
(ஆ) பெரியதம்பிரான் வழிபாடு
(இ) அண்ணமார் வழிபாடு
(ஈ) நாட்டார் கலைகள்

(05 × 4 = 20 புள்ளிகள்)

**8.** இந்து மருத்துவக் கலையின் சிறப்பம்சங்களை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(அ) அதர்வவேதத்தில் இந்து மருத்துவ சிந்தனைகள்
(ஆ) சரக சம்ஹிதை
(இ) சுஸ்ருத சம்ஹிதை
(ஈ) பழந்தமிழ் இலக்கியங்களில் மருத்துவக் கருத்துகள்

(05 × 4 = 20 புள்ளிகள்)

* * *